# ॥ अनात्मश्रीविगर्हणम् ॥

## அநாத்மஶ்ரீ விகர்ஹணம்

(1)

लब्धा विद्या राजमान्या ततः किं
प्राप्ता संपत्प्राभवाढ्या ततः किम् ।
भुक्ता नारी सुन्दराङ्गी ततःकिं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

லப்தா வித்யா ராஜமான்யா தத:கிம்
ப்ராப்தா ஸம்பத்ப்ராப வாட்யாதத: கிம் ।
புக்தா நாரீ ஸுந்தராங்கீ தத:கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

*அரசாங்கப் போற்றுதலுக்கேற்ற கல்வி பெற்றிருந்து என்ன பயன், ஆளுமையுடன் செல்வம் பெற்றிருந்துதான் என்ன பயன்? அழகிய ஆரணங்கு தன் வயப்பட்டிருந்தும் பயன் என்ன? ஒருவன் ஆத்மானுபவம் பெற்றிருக்கவில்லையெனில்?*

(2)

केयूराद्यैर्भूषितो वा ततः किं
कौशेयाद्यैरावृतो वा ततः किम् ।
तृप्तो मृष्टान्नादिना वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

கேயூராத்யைர்பூஷிதோ வா தத:கிம்
கௌசே யாத்யை ராவ்ருதோவா தத: கிம் ।
த்ருப்தோ ம்ருஷ்டான்னாதினா வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷத்க்ருதோऽபூத் ॥

*தோள்வளை போன்ற அணிகள் அணிந்திருந்தும் பயன் என்ன? நல்ல வெண்பட்டு உடுத்தியிருப்பினும்தான் பயன் என்ன? பிசைந்த நறுமண அன்னம் புசித்து திருப்திப்பட்டிருந்தாலும் பயன் என்ன? ஒருவன் ஆத்மஞானம் பெற்றிருக்கவில்லை யெனில்?*

(3)

दृष्टा नाना चारुदेशास्ततः किं
पुष्टाश्चेष्टा बन्धुवर्गास्ततः किम् ।
नष्टं दारिद्र्यदिदुःखं ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

த்ருஷ்டா நாநா சாருதேசாஸ்தத: கிம்
புஷ்டாஸ்சேஷ்டா பந்துவர்காஸ்தத: கிம் ।
நஷ்டம் தாரித்ர்யாதி து:கம் தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

*எவனொருவன் ஸ்வாத்மானுபவம் பெற்றிருக்க வில்லையோ அவன் அழகிய பல நாடு நகரங்களைப் பார்த்து வந்திருந்தும் பயனில்லை. அன்பிற்குரிய உற்றார் உறவினரைப் பேணி காத்திருந்தும் பயனில்லை. ஏழ்மை நீங்கி துன்பமே நெருங்காவண்ணமிருந்தும் பயனில்லையே?*

(4)

स्नातस्तीर्थे जह्नुजादौ ततः किं
दानं दत्तं द्व्यष्टसंख्यं ततः किम् ।
जप्ता मन्त्राः कोटिशो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

ஸ்நாத: தீர்த்தே ஜஹ்நுஜாதெள தத:கிம்
தாநம் தத்தம் த்வ்யஷ்டஸங்க்யம் தத:கிம் ।
ஜப்தா மந்த்ரா: கோடிசோ வா தத:கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

*எவனொருவன் ஆத்மானந்தானுபவம் பெறவே இல்லையோ அவன் கங்கை முதலிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்திருந்தும் பயனில்லை. பதினாறு வித தானங்கள் செய்திருந்தும் பயனில்ல. கோடிக்கணக்கில் மந்திர ஜபம் செய்திருந்தும் பயனில்லை.*

(5)

गोत्रं सम्यग्भूषितं वा ततः किं
गात्रं भस्माच्छादितं वा ततः किम्।
रुद्राक्षादिः संधृतो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत्॥

கோத்ரம் ஸம்யக்பூஷிதம் வா தத: கிம்
காத்ரம் பஸ்மாச்சாதிதம் வா தத: கிம்।
ருத்ராக்ஷாதி: ஸந்த்ருதோ வா தத: கிம்
யே நஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத்॥

*ஒருவன் ஸ்வாத்மானுபவம் பெற்றிருக்கவில்லையெனில் அவன் தனது வம்சத்தை முன்னேறச் செய்திருந்தும், உடம்பில் விபூதிப் பட்டைகள் தீட்டியிருந்தும், ருத்ராக்ஷம் முதலியவை தரித்திருந்தும் பயனில்லையே!*

(6)

अन्नैर्विप्रास्तर्पिता वा ततः किं
यज्ञैर्देवास्तोषिता वा ततः किम्।
कीर्त्या व्याप्ताः सर्वलोकास्ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत्॥

அந்நைர் விப்ராஸ்தர்பிதா வா தத: கிம்।
யஜ்ஞைர்தேவாஸ் தோஷிதா வா தத: கிம்।
கீர்த்யா வ்யாப்தா: ஸர்வலோகாஸ்தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத்॥

*அன்னம் முதலியவற்றால் நல்ல பிராமணர்களை திருப்தியடைவித்திருந்தும் பயனில்லை; யாகம் முதலியவற்றால் தேவர்களை மகிழ்ச்சியடைச் செய்திருந்தும் பயனில்லை; எங்கும் புகழ் பரப்பி வாழ்ந்திருந்தும் பயனில்லை. ஒருவன் ஆத்மானுபவம் பெறவில்லையெனில்.*

(7)

कायः क्लिष्टश्चोपवासैस्ततः किं
लब्धाः पुत्राः स्वीयपत्न्यास्ततः किम् ।
प्राणायामः साधितो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

காய: க்லிஷ்டஸ் சோப வாஸைத்தத:கிம்
லப்தா: புத்ரா: ஸ்வீயபத்ன்யாஸ்தத: கிம் ।
ப்ராணாயாம: ஸாதிதோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத் க்ருதோऽபூத் ॥

*உபவாஸமிருந்து காயகிலேசம் அடைந்தும் பலனில்லை. தனது மனைவியிடமே பிள்ளைகள் பெற்றிருந்தும் பயனில்லை. ப்ராணாயாமம் செய்து சாதனை புரிந்திருந்தும் பயன் இல்லை. ஒருவன் ஆத்மஸாக்ஷாத்காரம் பெறாவிடில்.*

(8)

युद्धे शत्रुर्निर्जितो वा ततः किं
भूयो मित्रैः पूरितो वा ततः किम् ।
योगैः प्राप्ताः सिद्धयो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

யுத்தே சத்ருர் நிர்ஜிதோ வா தத: கிம்
பூயோ மித்ரை: பூரிதோ வா தத: கிம் ।
யோகை: ப்ராப்தா: ஸித்தயோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாதக்ருதோऽபூத் ॥

*யுத்தத்தில் பகைவரை வென்றிருந்தும் பயனில்லை; மறுபடியும் உற்ற நண்பர்கள் புடைசூழ இருந்தும் பயனில்லை; யோக சாதனையால் பற்பல சித்திகளைப் பெற்றிருந்தும் பயனில்லை. ஒருவன் ஆத்மஸாக்ஷாத்காரம் அடைந்திராவிடில்.*

**(9)**

**अब्धिः पद्भ्यां लंधितो वा ततः किं**
**वायुः कुम्भे स्थापितो वा ततः किम् ।**
**मेरुः पाणावुद्धृतो वा ततः किं**
**येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

அப்தி: பத்ப்யாம் லங்கிதோ வா தத: கிம்
வாயு: கும்பே ஸ்தாபிதோ வா தத: கிம் ।
மேரு: பாணௌ உத்ருதோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸா க்ஷாத்க்ருதோऽபூத் ॥

*ஒருவன் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றிராவிடில் சமுத்ரத்தை காலால் தாண்டித்தான் என்ன பயன்? காற்றை குடத்தில் அடைத்துதான் என்ன பயன்? மஹாமேரு மலையை கையில் தூக்கிப்பிடித்துதான் பயன் என்ன?*

**(10)**

**क्ष्वेलः पीतो दुग्धवद्वा ततः किं**
**वह्निर्जग्धो लाजवद्वा ततः किम् ।**
**प्राप्तश्चारः पक्षिवत्खे ततः किं**
**येन स्वात्मा नैव सा क्षात्कृतऽभूत् ॥**

க்ஷ்வேல: பீதோ துக்தவத்வா தத: கிம்
வஹ்நிர்ஜக்தோ லாஜவத்வா தத: கிம் ।
ப்ராப்தஸ்சார: பக்ஷிவத் கே தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத் க்ருதோऽபூத் ॥

*ஒருவன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் செய்திராவிடில், அவன் விஷத்தை பால்போல் குடித்தும் பயனில்லை; பொரி போல் தீயை முழுங்கியும் பயனில்லை; பறவைபோல் வானில் பறக்கும் சக்திபெற்றிருந்தும் பயனில்லை.*

**(11)**

बद्धाः सम्यक्पावकाद्यास्ततः किं
साक्षाद्भिद्धा लोहवर्यास्ततः किम् ।
लब्धो निक्षेपोऽञ्जनाद्यैस्ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

பத்தா: ஸம்யக் பாவகாத்யா ஸ்தத: கிம்
ஸாக்ஷாத் வித்தாலோஹவர்யாஸ்தத: கிம் ।
லப்தோ நிக்ஷேபோऽஞ்ஜநாத்யைஸ்தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாத் க்ருதோऽபூத் ॥

தீ முதலியவை கட்டப்பட்டாலும் பயனில்லை உலோகங்களை கையால் துண்டு துண்டாக முறித்திருந்தாலு பயனில்லை; மை முதலியவற்றைக் கொண்டு புதையலை கண்டுபிடித்திருந்தாலும் பயனில்லை - ஒருவ ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றிராவிட்டால்.

**(12)**

भूपेन्द्रत्वं प्राप्तमुर्व्यां ततः किं
देवेन्द्रत्वं संभृतं वा ततः किम् ।
मुण्डीन्द्रत्वं चोपलब्धं ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

பூபேந்த்ர த்வம் ப்ராப்த முர்வ்யாம் தத: கிம்
தேவேந்த் ரத்வம் ஸம்ப்ருதம் வா தித: கிம் ।
முண்டீந்த்ரத்வம் சோபலப்தம் தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாத் க்ருதோऽபூத் ॥

ஒருவன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றிராவிடில் அவன் பூலோகத்தில் அரச ஸார்வ பௌமனாக இருந்தும் பயனில்லை, தேவேந்த்ர பதவியை தேடிப் பெற்றிருந்தும் பயனில்லை, ஸந்நியாஸிகள் தலைவர் என்று பெயர் பெற்றிருந்தும் பயனில்லை.

## (13)

मन्त्रैः सर्वः स्तम्भितो वा ततः किं
बाणैर्लक्ष्यो भेदितो वा ततः किम् ।
कालज्ञानं चापि लब्धं ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

மந்த்ரை:ஸர்வ: ஸ்தம்பிதோ வா தத: கிம்
பாணைர்லக்ஷ்யோ பேதிதோ வா தத: கிம் ।
காலஜ்ஞானம் சாபி லப்தம் தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத் க்ருதோऽபூத் ॥

*ஒருவன் ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கவில்லையாகில் அவன் மந்த்ரங்களால் எல்லோரையும் அசையமுடியாதபடி செய்து விட்டாலும் கூட பயன் என்ன? அம்புகளால் குறியை பிளந்து எரிந்து விட்டாலும் என்ன பயன்? துல்யமான கால அளவை தெரிந்து கொண்டு விட்டால் கூட என்ன பயன்?*

## (14)

कामातङ्कः खण्डितो वा ततः किं
कोपावेशः कुण्ठितो वा ततः किम् ।
लोभाश्लेषो वर्जितो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

காமாதங்க: கண்டிதோவா தத:கிம்
கோபாவேச: குண்டிதோ வாதத: கிம் ।
லோபாச்லேஷோ வர்ஜிதோ வாத த: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

*ஒருவன் ஆத்ம ஸ்வரூபத்தை ஆராய்ந்து கண்டுபிடித்துக் கொள்ளவில்லையானால், காமத்தொல்லையை அடியோடு தொலைத்து விட்டாலும், கோபத்தாக்குதலை முடக்கி விட்டாலும், பேராசையைச் சேராமல் அழித்து விட்டாலும்தான் பயன் ஏதுமில்லை.*

(15)

मोहध्वान्तः पेषितो वा ततः किं
जातो भूमौ निर्मदो वा ततः किम्।
मात्सर्यार्तिर्मीलिता वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत्॥

மோஹத்வாந்த: பேஷிதோ வா தத: கிம்
ஜாதோ பூமௌ நிர்மதோ வா தத: கிம்।
மாத்ஸர்யார்தி: மீலிதா வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவஸாக்ஷாத் க்ருதோऽபூத்॥

*மோஹமாகிய இருள் கசக்கி எறியப்பட்டது என்றாலும் பூலோகத்தில் செருக்கு இல்லாதவனாகப் பிறந்தான் என்றாலும் போட்டித் தொல்லை ஒடுக்கப்பட்டு விட்டது என்றாலும்தான் பயன் என்ன? ஏனெனில் ஆத்மானுபவம் பெறப்படவில்லையே?*

(16)

धातुर्लोकः साधितो वा ततः किं
विष्णोर्लोको वीक्षितो वा ततः किम्।
शम्भोर्लोकः शासितो वा ततः किं
येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत्॥

தாதுர்லோக: ஸாதிதோ வா தத:கிம்
விஷ்ணோர்லோகோ வீக்ஷிதோவா தத: கிம்।
சம்போர்லோக: சாஸிதோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத் க்ரும்தாऽபூத்॥

*எவனொவருவன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் செய்யவில்லையோ அவன் பிரம்மலோகத்தை எட்டி பிடித்து விட்டாலும், விஷ்ணுலோகத்தப் பார்த்து வந்து விட்டாலும், சிவலோகத்தை ஆண்டு விட்டாலுமே பயன் ஏதுமில்லையே!*

(17)

यस्येदं हृदये सम्यगनात्मश्रीविगर्हणम् ।
सदोदेति स एवात्मसाक्षात्कारस्य भाजनम् ॥

யஸ்யேதம் ஹ்ருதயே ஸம்யகநாத்மஶ்ரீ விகர்ஹணம் ।
ஸதோதேதி ஸ ஏவாத்ம ஸாக்ஷாத்காரஸ்ய பாஜனம் ॥

இந்த ஆத்மானுபவச் செல்வம் இல்லாதவனைப் பழித்தல் என்ற இவ்விஷயம் எவன் மனதில் நன்றாகத் தோன்றி முன்னேறுகிறதோ அவனே ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு பாத்திரமாவான்.

(18)

अन्येतु मायिकजगद्भ्रान्तिव्यामोहमोहिताः ।
न तेषां जायते क्वापि स्वात्मसाक्षात्कृतिर्भुवि ॥

அன்யே து மாயிக ஜகத்ப்ராந்தி வ்யாமோஹ மோஹிதா: ।
நதேஷாம் ஜாயதே க்வாபி ஸ்வாத்மஸாக்ஷாத் க்ருதிர்புவி ॥

மற்றவர் பொய்யான உலக வாழ்க்கையின் மயக்கம் கொண்டவர் ஆவர். அவர்களுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஒருபொழுதும் உண்டாகாது.

*அநாத்மஶ்ரீ விகர்ஹணம் முற்றிற்று*

